எத்தொழிலுமெக்கலமும் மிழிவுண்டேயல்லாது
சுத்தமதுவென்றெவருஞ் சொல்லுதற்குளவுளதோ. (எசுஉ)

ஆகாமை.

மன்னர்பகையு மாதவத்தோர் தன்பகையும்
வின்னக்கொலேஞர் விகடப்ரசங்கிபகை (எசுங)

ஊரார்பகையு முற்றாருடன் பகையும்
வீறுனமந்திரிபகை மிகுந்தபணக்காரர்பகை (எசுச)

வல்லகணக்கர்கவி வாணர்குருபகையும்
வல்லமைசேர்பண்டிதர்கள் மந்திரவாதிபகை (எசுரு)

பெற்றபிள்ளைபெண்சாதி பின்னவர்கள்முன்னவர்கள்
உற்றபதினேழி லொருபகையுமாகதே (எசுசு)

ஆறடுத்தவூரதுவு மரசரிடஞ்சேவகமும்
நீரில்விளையாட்டும் நீர்மிகுந்தபோராறும் (எசுஎ)

தாசியுறவுபிறர் தாரமின்னார்நேசமதும்
நேசமில்லாத்தாயாதி நேசமகாதுற்சனர்கள் (எசுஅ)

தன்னோடிணங்குவதுஞ் சத்ராதிநட்பதுவும்
பன்னகத்தையாட்டுவதும் பகடுநடத்துவதும் (எசுகூ)

மெய்விளங்கும்போதினிலே மின்னாருடன்புணர்ச்சி
மையிருளிலேதனித்து வழிபோகும்வல்லமையும் (அ00)

நஞ்சுடனேதீமருந்தில் நாளும்பழகுவதும்
அஞ்சாமலெப்போது மலைகைகளையோட்டுவதும் (அ0க)

ஆர்க்கும்கடலோட மதிலேதான்சஞ்சரித்தல்
பார்க்குள்மதுவுண்ணல் பலநாள்களவுசெய்தல் (அ0உ)

இத்தகையாய்ச்சொன்ன திருபதையுமேமனதி
லுற்றாலிடறு முயிர்க்குலயமாமிதுவே (அ0ங)

ஈருர்பயிரிடுவோ ரில்லாளிரண்டுடையோர்
ஊரார்போம்பாதைமந்தை யோரம்பயிரிடுவோர் (அ0ச)

பிணைபட்டுப்பொய்ச்சாட்சி பேசுமிவர்நால்வர்களும்
சுணைகெட்டபேரிவர்கள் துன்பத்திற்குள்ளாவார் (அ0ரு)

சிற்றூர்குடியிருப்போர் சீர்கெட்டபெண்டுடையோர்
பெற்றபிள்ளையிற்றிரளாய்ப் பெண்ணுகப்பெற்றவரும் (அ0சு)

அற்பனைச்சேவிப்பவரும் மலக்கழிந்துபோவதல்லாற்
சொற்பச்சிலநாளில் தொந்தரைக்குள்ளாவார்கள் (அ0எ)

அத்திக்காய்கோவைக்கா யைவிரலிதேற்றான்காய்
ஈத்தவெள்ளைக்கத்தரிக்காய் சோற்றிற்கலந்தவிவைகள் (௮௦௮)
தின்பார்க்கொருநாளுந் தேவபக்தியில்லையென்று
முன்பாகநூலோர் மொழிந்தார்மனுநூலில் (௮௦௯)
துறந்தோரடங்காதார் துன்னுபிணியோர்களையும்
புறம்பேசுவஞ்சகர்கள் பின்னவர்கள்பெண்டுகளும் (௮௧௦)
கல்லாதவன்னெஞ்சர் காணுமிவரெண்மரையும்
நல்லசபையிலொரு நாளும்வைத்துப்பேசவொண்ணா (௮௧௧)
ஆசனங்கள்தான்போடி லாயிசதுவிர்த்தியில்லை
போசனமுந்தான்சமைத்தால் போமேயைஸ்வரியம் (௮௧௨)
தனக்கெண்ணெய்தான்தேய்த்தாற் சந்ததிகட்காகாது
அனர்த்தமிதுமூன்றென் றருளினார்முன்னோர்கள் (௮௧௩)
யோகியொருபோதே யுண்பானிருபோது
போகியுண்பான்மூன் று போதுண்பான்வியாதிஸ்தன் (௮௧௪)
உடனொருநான்குபோ துண்ணுமவன்றனக்கு
இடையூறுண்டாகுமென் றியம்பினார்முன்னோர்கள் (௮௧௫)
வீரத்திலொப்பில்லா விக்ரமனேயானாலும்
வீரியமும்வாதும் விளம்பிடவுமாகாது (௮௧௬)
வேந்தர்குருபொய்யர் மேன்யுள்ளோர்கோபிகட்கும்
வாய்ந்தகடன்கொடுத்து வாங்குவதுநீதியல்ல (௮௧௭)
நாட்டுக்காகாதவனை நமக்கடங்காப்பெண்டீனை
மீட்டுமந்தராசனுக்கு மேலானமந்திரியை (௮௧௮)
துற்சனர்சினேகமதைத் தொட்டாலசையும்பல்லை
இட்சணமேயைந்து மெடுத்துவிடவேணுமென்பார் (௮௧௯)
கடன்பட்டுத்தீர்ந்ததோர் கைச்சிட்டிலேசேஷம்
விடந்தீண்டீமீண்டதிலே யெவ்வளவுமேசேஷம் (௮௨௦)
அக்கினியில்வெந்த அகந்தனிலேசேஷம்
மிக்கானசத்துருவை வெல்லுவதிலேசேஷம் (௮௨௧)
தெய்வப்பிரார்த்தனைகள் செய்துமதில்சேஷம்
உய்யப்பிணிமருந் துண்டதிலேபின்சேஷம் (௮௨௨)
காணிபோய்மீண்டதிலே கடுகளவுசேஷமுடன்
ஆணியாம்பத்து மனுவும்வைக்கலாகாதே (௮௨௩)

பலனில்லாமை.

சந்திரனில்லாவானஞ் சற்சனரில்லாதவூர்
மந்திரியில்லாதவாசல் மதகரியில்லாதவெம்போர் (அ௨ச)
மக்களில்லாச்செல்வ மதுரமில்லாதகவி
தக்கதளபதிகள் தானில்லாவெஞ்சேனை (அ௨ரு)
பெண்ணரில்லாதமனை பிறவியில்லாதவுடல்
விண்ணணப்பாடல் வினையமில்லாவேசி (அ௨சு)
கோப்பில்லாக்கூத்துடனே கொங்கையில்லாப்பெண்ணழகும்
தாப்பில்லாச்சீவனங்கள் தந்திகளில்லாவீணை (அ௨எ)
பத்தியில்லாப்பூசை பார்த்திபரில்லாதபுறம்
சத்தியமில்லாதவாய் தானறியாவாணிபங்கள் (அ௨அ)
சந்தமில்லான்பாட லுதாரணஞ்சொல்லாதகவி
நந்தாப்புனல்சேர் நதிவளமில்லாநாடு (அ௨கூ)
தேசிகனில்லாதவித்தை தியானமதில்லாத்தீட்சை
பேசரியநல்லறிஞர் பெரியோரிலாதசபை (அக0)
குடிநலமில்லாநாடு குணமில்லாப்பெண்ணசை
வடிவுற்றுவாசமில்லா வர்னமிகுமலரும் (அகக)
சேகரமில்லாக்கனதை தீபமில்லாதமனை
சூகரம்போலுண்ணுகின்ற சுகியில்லாப்போசனமும் (அக௨)
கல்வியில்லாத்தேகங் கற்பனையில்லாதகவி
வல்லவிவ்வெண்ணன்கில் வரும்பயன்களொன்றுமில்லை (அகக)
தந்ததேபோதுமென்று தான்வாங்காவேதியனும்
வந்ததேபோதுமென்று வாங்குகின்றராஜாவும் (அகச)
வெட்கத்துக்கஞ்சுகின்ற வேசையரும்வெட்கமில்லா
மிக்ககுலப்பெண்டீர்க்கு மேன்மையில்லைநஷ்டம்வரும் (அகரு)
அன்னையிறந்தாலுண வானதெல்லாநஷ்டமதாம்
பின்னைப்பிதாவிறந்தாற் பேரானவித்தைநஷ்டம் (அகசு).
உற்றதுணையிழந்தா லுடலிலேபாதிநஷ்டம்
மற்றுமனையாளிறந்தா லன்றுதலைபோனதென்பார் (அகஎ)
பருவம்போயப்யாசம் பண்ணுவிக்கும்வித்தைகளும்
பெரியகிழவனுக்குப் பெண்டிளமைப்பெண்ணளும் (அகஅ)
அத்ததரித்திரருக் கழகுடையபெண்டீரும்
இத்தகைமைமூன்றினிலு மெய்தும்பயனிலையே (அககூ)

23480

## மனுநீதிகாதல். (8526)

வாரியிலேபெய்ந்தமழை வயிறுபசியில்லாத
பேர்களுக்குப்போடுஞ்சோற் பிசாசுக்கிடும்பூசை (௮௪௦)

பொன்னுள்ளோர்க்கீய்ந்தபொருள் போதவிந்நான்கினிலும்
என்னபலனுமில்லை யென்றனரேமுன்னூலோர் (௮௪௧)

அந்தணர்க்குமாவுக்கும் ஆபத்திலேயுதவார்
இந்தவுலகி லிருந்தென்னிறந்துமென்ன (௮௪௨)

யார்க்குமுரையாதவித்தை யநேகவிதமாகப்
பார்க்குள்படித்தென்ன படியாதிருந்துமென்ன (௮௪௩)

என்னகறிசுவைக ளினிதாயிருந்தாலும்
பின்னுமதில்நெய்யில்லாப் போசனமுந்திருப்தியல்ல (௮௪௪)

தன்னால்நிருவகிக்கத் தகாதவிரதமுற்றால்
என்னபலனுமில்லை யிடருவருமுத்தியில்லை (௮௪௫)

தருணமறிந்துதவாத் தன்மைசேர்நட்பாளர்
அருமையாய்ப்பின்னா லுதவியுதவாமலென்ன (௮௪௬)

வாலிபத்திலெய்தாத வடிவுடையபெண்ணாளும்
சாலவிர்த்தாப்பியத்திற் சார்ந்தென்னநீங்கிலென்ன (௮௪௭)

புருஷனில்லாவிதவை பொன்னாடையாபரணம்
யரிசையுடனணிந்தால் வையகத்தோரேசுவரே (௮௪௮)

பெற்றதாயில்லாத பிள்ளைதனையெவ்வாறு
வைத்துவளர்த்தாலும் வளங்கொடுக்கமாட்டாதே (௮௪௯)

பல்லில்லாதோருமற்பப் பசியுள்ளோரானவரும்
நல்ருசிகாணாரென்று நவின்றார்மனுநூலோர் (௮௫௦)

தெய்வங்குருமுறையுந் திருஞானசாஸ்திரமும்
வையகத்திலேமருந்து மந்திரமோதிவ்வைந்தும் (௮௫௧)

மெய்யென்றுரைப்பவர்க்கு மெய்யாய்விளங்கிநிற்கும்
பொய்யென்றுரைத்தாக்காற் பொய்யாகிப்போய்விடுமே (௮௫௨)

பாடுபடாமற் பலன்கொடுக்குநற்பனைபோல்
நாடிக்கொடுப்பதுவே நன்றாகுமுத்தமமாம் (௮௫௩)

சிலதுநாள்பாடுபட்டால் தென்னைமரம்பின்பு
பலந்தருதல்போல்கொடுக்கும் பண்பதுவேமத்திமமாம் (௮௫௪)

வருடமெல்லாம்பாடுபட்டால் வாழையொருவிசைதான்
தருமபலன்போற்கொடுக்குந் தர்மமதர்மமுமாம் (௮௫௫)

தெண்டனையில்லாவேலை சேயரில்லாதமனை
கொண்டவர்க்குள்ளடங்காக் கொம்பனையாளில்வாழ்க்கை ()

வண்டரிணக்கம் வறுமைதனிற்சேர்க்கும்
மண்டலத்திலிவ்வைந்தும் வளர்தரவுமாட்டாதே (அருஎ)

மாரிகாணுதபயிர் மக்களில்லாவில்வாழ்க்கை
ஏரிகுளமில்லாவூ ரிரவிகாணுவனசம் (அருஅ)

அன்னைகாணுதபிள்ளை ஆவினைக்காணுதகன்று
பொன்னில்லாப்பூஷணங்கள் போசனமுண்ணுதவுடல் (அருகூ)

காவுகாணுதவண்டு கலைகள்காணுக்குமரன்
மேவுகொழுனனில்லா மெல்லியர்களானவரும் (அகூ0)

தோழர்காணுநேசர் சோடுகாணுப்பேடு
மீனுமதிகாணுத வெண்குமுதமானதுவும் (அகூக)

பெரியோரில்லாதசபை பெண்கள்தனில்மூத்தாள்
உரியதியாகியில்லா வூர்பதினேழாமிவைகள் (அகூஉ)

தாழ்வுதருமல்லாது சாந்தவளமாகாது
வாழ்வுகாணுவிளமை வாறுகுமென்றிடுவார் (அகூரு)

நல்லோர்க்குச்செய்தநன்றி நாட்டிவைத்தகல்லெழுத்தாம்
பொல்லார்க்குச்செய்தநன்றி பொய்கையுறும்நீரெழுத்தாம் ()

சுற்றமுண்ணுவில்வாழ்வுஞ் சுதியில்லான்பாடுவதுங்
கற்றறியான்பாடுகவி கைம்பெண்ணிலேயழகும் (அகூரு)

துற்குணப்பெண்சாதி சொற்கேளாதவடிமை
மிக்கவிவையாறும் வீணும்பயனிலையே (அகூகூ)

ஊமைசெவிடருக் குரைத்தவுபதேசம்
சேமமென்றுபாவிகட்குச் செய்தவுபகாரம் (அகூஎ)

மேலுமுவர்நிலத்தில் விதைத்ததொருநல்விதையும்
சாலவிதைமூன்றுந் தண்ணீரிற்கரைத்தபுளி (அகூஅ)

குதிரைக்கிராவுத்தன் கூறுகவிக்குப்புலவன்
சதிராணவாயுதங்கள் தனக்குச்சிலம்பியுமாம் (அகூகூ)

வேசைக்குநட்டுவனும் விளங்குபலராகமதற்
காசையாய்ப்பாடுவனு மைவருந்தானில்லாவிட்டால் (அஎ0)

ஏத்தமுடன்மதிலி லெழுதிவைத்தபெண்ணழகைப்
பார்த்துமகிழ்ந்துபோம் பண்பாம்பலனிலையே (அஎக)

தேவாலயஞ்சுற்றித் திரும்பாததாள் தாளோ
தேவதரிசனங்கள் செய்யாதகண்கள் கண்ணோ (அ௭௨)
பகவான் தியானமதைப் பண்ணாதசிந்தையென்ன
ஜெகமீதுபகவானைச் சேவியாச்செங்கையென்ன (அ௭௩)
சிவன்மாலையுந்துதிகள் செய்யாதவாயென்ன
சிவன்மாலையும்வணங்காச் சென்னியுமேசென்னியதோ (அ௭௪)
தினமும்புராணகதை செவிகேளாதென்னசெவி
முனையானபுண்யநதி மூழ்காததென்னவுடல் (அ௭௫)
மேவுமிவையெட்டு மில்லாதோன்பாழ்செனனம்
பாவியிவனிருந்தும் பலனில்லைவீண்பிறப்பாம் (அ௭௬)
ஞானமறிதல்கொடை யாளிதனவானாய்
ஆனதொருபூவலஞ்செய் வானாய்விவேகியுமாய் (அ௭௭)
மிக்கதொருவித்துவான் விளங்குகின்றகீர்த்திவான்
உக்ரரணவீர னுபகாரியாவருக்கும் (அ௭௮)
இவ்வகையிலோர்பே ரெடுக்காதசென்மமவன்
இவ்வுலகிலேமனித னென்றவனைச்சொல்லவொண்ணா (அ௭௯)
சீர்படைத்தவோர்மனுஷச் சென்மமொருயோசனைக்குள்
பேரெடுக்காப்பேர்மனுஷப் பிறப்பிற்கழுதையுமாம் (அ௮0)

லோபத்தனம்.

தேன்றுளியொன்றுற்கடலைத் தித்திக்கச்செய்தாலு
மேன்மையுடன்மலையை மெழுகாகச்செய்தாலும் (அ௮௧)
பூவினால்வச்சிரத்தைப் பேர்த்துத்துளைத்தாலும்
மேவுங்கபடருக்கு மெஞ்ஞானம்வந்தாலும் (அ௮௨)
ஊமைபடித்திடினு மூக்கமில்லாப்பேடிக்கு
தாமேதான்வீர்ய தயிரியமுண்டாயிடினும் (அ௮௩)
நித்தங்கயவருக்கு நீதிமுறைவந்தாலும்
இத்தலத்திலோபர்களுக் கீகைசற்றும்வாராதே (அ௮௪)
தின்னுமலுண்ணுமற் றேடிமிகச்சேர்த்துப்
புண்ணியமுஞ்செய்யாமற் புதைத்துவைக்கும்லுத்தர்பொருள் ()
தெண்டம்பெரும்பிடிக்கும் தீக்குந்திருடருக்கும்
வண்டமனவேசைகட்கும் வலுவந்தக்காரருக்கும் (அ௮௬)
இதமில்லாப்பேடிகட்கு மெல்லாப்பிசாசுகட்கும்
உதவுமேயீயா வுலுத்தர்பொருளதுதான் (அ௮௭)

8

ஆகாப்பதரெனினு மரியவிபூதியைவிளக்கும்
வாகாய்ப்பழுஞ்சுவரும் மாடுறைஞ்சுமுன்மறைவாம் (அஅஅ)
மாடுகெடாவதுவும் வையகத்திலேயுழுவாம்
கூடப்பொதிசுமக்குங் கூடிவருமேயதனுல் (அஅகூ)
செத்தபிணமானுலுஞ் சிறிதுபகாரமுண்டு
புற்றதுவுமண்ணுகும் பொங்கரவுக்கேமனையாம் (அகூ0)
கல்லாலேயாலயங்கள் கனத்தபணிதியுண்டு
அல்லற்கழுதையென்று லழுக்குப்பொதிசுமக்கும் (அகூக)
வாறுகோலானுலு மாளிகையெல்லாம்விளக்கும்
பேருய்க்குரங்கு பிடித்தார்க்குதவிசெய்யும் (அகூஉ)
ஈயாதலோபிகளா லெவர்க்குமுபகாரம்
வாயாதவர்கொடுக்க மாட்டாரொருநாளும் (அகூங)
நெல்விற்பதரென்ன நீரினிலேபாசியென்ன
நல்லமரத்தில்மொக்கு நன்றுயிருந்துமென்ன (அகூச)
சீதேவியாருடனே சீர்கேடியானதொரு
மூதேவிதான்பிறந்து முக்கியமுண்டோவதனுல் (அகூரு)
தய்வாயொருவயிற்றிற் சார்ந்தவிவேகியுடன்
கயவர்பிறந்துமென்ன காரியமெல்லாஞ்சிதையும் (அகூசு)
உச்சிதமாயார்க்கு முதவியில்லாதார்வாழ்க்கை
நச்சுமரம்பழுத்து நடுவூரில்நிற்பதொக்கும் (அகூஎ)
செத்தபிணமதனைச் சிங்காரித்தாவதென்ன
கைத்தலத்திலெழுத்துக் காட்டிலேபோட்டுமென்ன (அகூஅ)
நாயானதுகொழுத்தால் நாட்டிலதையார்புசிப்பார்
ஈயாதலோபியருக் கெல்லாமிருந்துமென்ன (அகூகூ)
ஈகையில்லாமாந்த ரிருந்தென்னிறந்தென்ன
ஆகையாலேமிருக மதனிலேசேர்க்கவென்றூர் (கூ00)

இகழ்ச்சியீனம்.

கற்பனையில்லாத கவிதனையேகேட்பதுவும்
விற்பனமில்லாரிடத்தில் வேண்டுங்கொடைபலவும் (கூ0க)
ஆதரவில்லாதபெண்டீ ரருமையில்லாச்சேவகமும்
பேதமின்றிப்பேர்விளங்காப் பிள்ளைதனைப்பெற்றதுவும் (கூ0உ)
ஊழிவினையு முதிர்கொடுமையல்லாமல்
வாழ்வல்லவீனாந்தும் வசையாகுங்கண்டீரே (கூ0ங)

நீர்நுழையாவிடத்தில் நெய்நுழையும்நெய்நுழையாச்
சார்பிலேபால்நுழையுந் தானதுபோகாவிடத்தில் (கூ0ச)
மீறிப்புகைநுழையும் வெம்புகைபோகாவிடத்தில்
தாரித்திரனுமது தன்னில்நுழைவானும் (கூ0ரு)
தக்கதராதரங்கள் தானறியாப்பேரிடத்தில்
ஒக்கவிருந்துண்பதிலு மோடெடுத்திரத்தல்நன்று (கூ0கூ)
தூயவறிவில்லாச் சுதனைப்பெறுவதிலும்
பேயதனைப்பிள்ளையாய்ப் பெற்றுவளர்த்தல்நன்று (கூ0எ)
உள்ளன்பில்லார்களுடனட்புக்கொள்வதிலும்
கள்ளுண்ணும்வம்பர் கழுதைகளைமேய்த்தல்நன்று (கூ0அ)

வெளிவிடக்கூடாதவை.

ஆசானுபதேச மரிவையர்கள்தன்புணர்ச்சி
மாசானசோரம் மனதடக்கமுற்றபொருள் (கூ0கூ)
மானம்பிறர்மானம் மறந்துடனேதான்கொடுத்தல்
தானுமகத்திருக்குந் தனத்தினளவினையும் (கூக0)
இல்லறத்தின்கேவலங்கள் யாவரிடமீதுபத்துஞ்
சொல்லவொண்ணாதீனமென்று சொன்னார்மனுநூலோர் (கூகக)
தன்னகத்தாளன்றிமறு தாரமேலாசையுற்றால்
பின்னொருவர்தானமது பெண்டீனாச்சேராரோ (கூகஉ)
பறையன்பறையனல்ல பகர்ந்தமொழிதப்பிதமாய்ப்
பறைவோன்பறையனென்று பகர்ந்தாரோமுன்னூலோர் (கூகரு)
ஞானமுஞ்சற்குணமு நாளுமில்லான்கற்றகனி
ஈனப்பறையர்வீட் டிருக்குங்கங்காசலமாம் (கூகச)
தண்ணீரினன்மை தறையுவற்றினாலழியும்
பெண்ணார்கள்நன்மை பிறர்கமனத்தாலழியும் (கூகரு)
கோதில்லாமாதவசு கோபத்தினாலழியும்
வேதகுலநன்மை விபசாரத்தாலழியும் (கூகசு)
மன்னவர்கள்நன்மை மனுநீதியாலழியும்
இந்நிலத்திலுத்தமர்கள் யாவர்களுஞ்செய்தநன்றி (கூகஎ)
பொல்லாததன்னகத்துப் பெண்ணாலழியுமென்று
வல்லோர்கள்முன்னால் மனுநூலுரைத்தனரோ (கூகஅ)
பருவதமும்பாற்கடலும் பார்வதியும்லட்சுமியும்
அரிதாய்ப்பிறந்திடத்தி லரியரனும்வாழ்வதுபோல் (கூகசு)

பூமியிலேதங்கள்மனைப் பெண்ணுள்பிறந்தவிட
மாமியார்வீடே வளமென்றுரைப்பார்கள் (கூ௨0)

## கேடு.

காவலர்களாணை கடப்பதுவுமேயடங்கா
நாவுமிகுகோபமுட னமதுரைகேளாவடிமை (கூ௨க)
ஆதாயமின்றி யதிகச்செலவுகளும்
காதாரக்கேளாச்சொல் கவியில்மிச்சங்கண்டெழுத்தும் (கூ௨௨)
சாட்சிமிஞ்சும்வழக்குந் தயிரியமிஞ்சுங்கவலை
பேச்சில்சரசமிஞ்சிப் பேசுபரிகாசமதும் (கூ௨௩)
பத்ததுவுஞ்சொற்கடங்காப் பாவைதனைப்பெண்டாக
வைத்தான்படுந்துக்க மதனைவிடத்துன்பமுமாம் (கூ௨௪)
ஓரவிவகாரமா யுயர்ந்தோர்க்குச்சொன்னவர்கள்
ஊரழியுமேசுமக்க வுலகமதுநடுங்கும் (கூ௨௫)
உப்பிட்டபாண்டமிலை யுதிர்ந்தமரம்போலாம்
ஒப்பில்லாவாழ்வுபோ முற்றார்பெற்றார்பாழாம் (கூ௨௬)
மாதேவியான மலர்மாதகன்றிடுவள்
மூதேவிசேர்வள் முடிவில்நரகமெய்தும் (கூ௨௭)
என்னேரஞ்சண்டையுமட் டில்லாச்சிரிப்பதுவுஞ்
சின்னஞ்சிறியாரிணக்கந் தீராக்கொடுங்கோபம் (கூ௨௮)
வேசையுறவும் விவேகமில்லாரிடத்தில்
ஆசராய்ச்சேவகங்க ளாறுமிவைகேடெய்தும் (கூ௨௯)
தேடாப்பொருளழித்தல் தீராதகோபம்ரண்டும்
கேடாய்முடியுமல்லால் கீர்த்திசற்றும்வாராதே (கூ௩0)
ஞானந்தனங்கல்வி நாடிவருங்கால
மானூர்மேலாசைதரும் வாழ்வும்போந்துக்கமுமாம் (கூ௩க)
என்னன்றியைமறந்தார்க் கெவ்வாறுமுய்வுண்டாம்
மனமறிந்துசெய்தநன்றி மறந்தார்க்கீடேற்றமில்லை (கூ௩௨)
இமிசைப்பட்டாற்று தேழையழுதகண்ணீர்
வமிசத்தைத்தேய்க்கு மரமுங்கூர்வாளெனலாம் (கூ௩௩)
தீங்கானவாங்காரஞ் செல்லுமிடமானதன்றித்
தாங்காவிடஞ்செலுத்தில் தப்பாமற்கேடுவரும் (கூ௩௪)
தாழ்ந்தாருயர்ந்தார் சரியாமெனவறிவால்
ஆய்ந்துமரியாதைசெய்யா தாராகிற்கேடுவரும் (கூ௩௫)

சரியானபேரையன்றித் தன்னிலதிகபலப்
பெரியோருடனெதிர்த்தாற் பிராணபயமுண்டாகும் (௩௩௬)

இத்தலத்தில்யாரொருவர்க் கெந்நாளுமுற்பாதம்
புத்திபிர்தானமாய்ப் பொல்லாங்குசெய்பவர்கள் (௩௩௭)

புத்திரர்களில்லாமற் போவதுவுமல்லாமல்
அர்த்ததரித்திரரா யற்பாயிசாவார்கள் (௩௩௮)

ஏர்க்கையுடனிதமு மேதேதுகாரியமுந்
தீர்க்கவிசாரணைகள் செய்யாரேயாமாகில் (௩௩௯)

பின்னுமேலதுன்பம் பிணக்குமிகவுண்டாகும்
அந்நாளோர்கீரியினு லைந்துகுடிகெட்டதொக்கும் (௩௪0)

சத்ராதிசொல்லைத் தனதாய்நினைப்பவரும்
உற்றமனையாட்டிக் குண்மையுரைப்பவரும் (௩௪௧)

கொடுத்தகடன்கேட்டாற் கோபங்களுற்றவரும்
எடுப்பாய்ப்பெரியோரை யெண்ணுமற்பேசினவர் (௩௪௨)

பெரியதனம்வந்தவுடன் பின்னுமுன்னும்பாராமல்
இருவிழியாற்சற்று மேரிட்டுப்பாராதார் (௩௪௩)

இனியபார்தானதத் திச்சைவைதம்தம்யருவர்க்
கனியாயஞ்செய்துபொல்லா வவதிவரச்செய்தவர்கள் (௩௪௪)

பாரிதனைவிட்டுப் பரத்தைமேலாசைவைத்த
பேரெழுவருங்கெடுவர் பேய்நாய்ப்பிறப்பாகும் (௩௪௫)

கூடிப்பிரிவதினுற் கொடியசூதாடுகையாற்
கேடுவருமிதற்குக் கெணிதமில்லையென்றனரே (௩௪௬)

கண்ணினுற்காண்பதுவுங் காதினுற்கேட்பதுவுந்
திண்ணமுடன்முன்பின்னுய்ச் செப்பினுற்கேடுவரும் (௩௪௭)

வித்தைமதமைஸ்வரிய மேலுங்கிளைகூட்ட
மற்றும்பயவிழியி னுலுமகிழ்ச்சியினுல் (௩௪௮)

ஏர்க்குமெளியோர்கள்முதல் யாவரையுந்தூஷணித்தால்
தீர்க்கமிடிகேடுவருந் திண்ணமென்றார்வள்ளுவனுர் (௩௪௯)

நெஞ்சிற்பயமதுதா னேரிடவேயாவரையும்
அஞ்சவஞ்சஞ்செய்தா லவர்கட்குக்கேடுவரும் (௩௫0)

தினையளவுநன்றிமுன்னஞ் செய்தாரேயாமாகில்
அணுப்போதிலுமறக்க லாகாதுதான்மறந்தால் (௩௫௧)

அந்தணர்க்குங்கோவுகட்கு மடாதபொல்லாங்குசெய்த
நிந்தனைவர்தவர்க்கு நேரிடுமென்றேயுரைத்தார் (௬௫௨)

ஆவலுடன்தன்பிழைப்புக் காகவொருவருக்குத்
தீவினைகளெவ்வளவுஞ் செய்வாரேயாமாகில் (௬௫௩)

நீண்டதொருதன்னிழல்தா னின்றடியிலாவதுபோல்
ஆண்டுநூறுனனு மவரைவிட்டுப்போகாது (௬௫௪)

முன்னிலதிக மிடிமையதுவுண்டாகும்
பின்னுமேலேழுவேழ் பிறப்பும்விட்டுப்போகாது (௬௫௫)

செய்ததொருதீவினைதான் செய்தவர்க்கெப்போது
மெய்துமென்றுசொல்லி விளம்பினார்வள்ளுவரும் (௬௫௬)

அரிது

அரிதரிதுமானிடர்க ளாகப்பிறப்பதுதான்
உரியதொருகூன்குருடு ஊமைசெவிடும்பேடும் (௬௫௭)

நீக்கிப்பிறக்கரிது நேராய்ப்பிறந்தாலும்
தீர்க்கமுற்றஞானஞ் சிறந்தகல்விநற்குணங்கள் (௬௫௮)

வாரதரிதரிது வந்தாலுந்தானதர்மம்
நேராய்த்தரிக்கரிது நெஞ்சிற்றரித்தாக்கால் (௬௫௯)

நீணிலத்திற்குன்றுமல் நெடுநாளும்வாழ்வுபெற்று
வானவர்கோன்றன்பதமும் வருமென்றுரைத்தனரே (௬௬0)

இனிது

இனிதினிதுவேதாந்த மினிதினிதாமன்பருள்ளம்
இனிதினிதுகாணுக்கண் ணேதுங்கேளாச்செவியே (௬௬௧)

கொடிது

கொடிதுகொடிதென்பதுதான் குவலயத்திலேவறுமை
இடருமதிற்கொடிது இளமைதனிலேவறுமை (௬௬௨)

அதிற்கொடியதாமருந்தி லகலாதவெவ்வியநோய்
அதனிற்பெருங்கொடிது அன்பில்லாத்தம்பியுமாம் (௬௬௩)

அதனில்மகாகொடிது அடங்காதபெண்சாதி
அதனிற்கொடிதுண் டவளோடுறங்குவதே (௬௬௪)

பெரிது

பெரிதுபெரிதிந்தப் பேருலகநான்முகன்றன்
அரியப்படைப்பாகு மவன்மால்வயிற்றுதித்தோன் (௬௬௫)

23480

மனுநீதிகாதல். (8526) ௬௯

மாலோகடல்துயின்றோன் வாரிகுறுமுனிவன்
பாலொடுக்கமாமுனிவன் பண்டொடுக்கங்கும்பமதில் (௬௬௬)
கும்பமோபூமியதற் குள்ளாம்பொடிமண்ணும்
தம்பமொருபூமியோர் தலைப்பாரஞ்சேடனுக்கு (௬௬௭)
சேடனுமையாள் சிறுவிரலிஞழியதாம்
ஈடில்லாநல்லுமையாள் னிறையவர்க்குள்ளேயொடுக்கம் ()
தொண்டரிதயத் தொடுக்கமிறைவன்றான்
தொண்டர்பெருமைதனைச் சொல்லமுடியாததுவாம் (௬௬௯)

முக்கியமுள்ளது

தலத்திற்சிதம்பரமாந் தாருவினிற்சந்தானம்
பலத்திலேமாருதமாம் பிரணவமாமந்திரத்தில் (௬௭0)
வேதத்தில்சாமம் விரதமேகாதசியாம்
மாதத்தில்மார்கழியா மலைதனிலேமாமேரு (௬௭௧)
நிலத்திலேகாஸ்மீரம் ரிஷிகளிலேவசிஷ்டர்
குலத்தில்மறையோராங் குதிரையிலுச்சிச்சிரவம் (௬௭௨)
வாரத்திலாதித்த வாரமந்தநாள்மீனில்
பேருற்றவாதிரையாம் பெருமுனியில்நாரதனும் (௬௭௩)
தனத்திற்குபேரனன்ன தானமேதானமுமாம்
மனுக்களிலேராஜாக்கள் வாரியிலேபாற்கடலாம் (௬௭௪)
மேகத்திற்புஷ்கரமாம் விலங்குகளிற்சிங்கமுமாம்
யாகந்தனிற்சிரேஷ்ட மச்சுவமேதமென்பார் (௬௭௫)
மாமணியில்மாணிக்க மலரிலேபத்மமலர்
காமதேனுப்பசுவில் கங்கைநதியாம்நதியில் (௬௭௬)
தமிழிலகத்தியராந் தந்தியிலைராவதமாந்
தமனியமாம்லோகத்தில் தானியத்திற்செந்நெல்லாம் (௬௭௭)
பட்சிகளிலேயுவணம் பாம்பிலேவாசுகியாம்
மச்சத்திலேமகரம் வடிவுதனிலேரதியாம் (௬௭௮)
கற்பிலருந்ததியாங் கபிலராஞ்சித்தர்களில்
செப்புகின்றவாக்கில் ஸ்ரீராமச்சந்திரனும் (௬௭௯)
அசுரர்குலத்தில்பிரக லாதனனேயுத்தமனும்
வசியமுறுபடையில் வச்சிராயுதமாகும் (௬௮0)
சங்கினத்திற்பாஞ்சசன்யஞ் சந்திரனுங்கிரகத்தில்
தங்கும்பதவியிலே சாயுச்சியமாகும் (௬௮௧)

போகத்திலிந்திரனும் புஷ்பகமாம்வாகனத்தில்
வாகொத்தவில்லறத்தின் வாழ்விலேமைந்தர்களாம் (௬௮௨)
உடையிலேபட்டாடை யுத்தியிலேயூகிமந்த்ரி
கொடையிலேதான்கர்னன் குணமூன்றில்சாத்மீகம் (௬௮௩)
மன்னும்புராணத்தில் மகாபாரதமாகும்
துன்னுஞ்சுடரொளியில் சூரியனேமேலொளியாம் (௬௮௪)
ஆடுமீனிராறி லதிகந்துலாமாகும்
வாடாதநுண்ணியநூல் வள்ளுவனார்சொற்குறளாம் (௬௮௫)
கவையாறிலேலவணந் துணைவரிலிலக்குமணன்
சிவமணியிலக்குவடந் தேசத்தில்சோழமதே (௬௮௬)
பொருமையிலேபூதேவி போரிலேராவணனும்
திருமாலாம்ராகவனுஞ் செய்தபோரேயதிகம் (௬௮௭)
ஓசைதனிலிடியே றூரிலயோத்தியதாம்
ராஜரிலேராஜாதி ராஜனும்விக்கிரமன் (௬௮௮)
அன்பாகச்சொன்னவிந்த வறுபத்துநான்குமதே
முன்பாமுதன்மையென்று முன்னோர்மொழிந்தனரே (௬௮௯)

கொடுமையாலழிந்தவர்

தக்கனிரணியனுஞ் சக்ரவர்த்தியாம்நிமியும்
மிக்கானவாகுலங்கள் மேலுளிலேநகுலன் (௬௯௦)
பந்தமுறுகின்றசிசு பாலனறுவர்களும்
நிந்தனையினாலே நிர்மூலமானார்கள் (௬௯௧)
கஞ்சன்துரியோதனனுங் காளமுனிவன்சகுனி
வஞ்சகஞ்செய்வாதாவி மாரீசனுங்கவந்தன் (௬௯௨)
பூதகியசோமுகியும் பொல்லாதசூர்ப்பனகி
வாதுபுரியுந்தந்த வக்கிரனுமென்பவனும் (௬௯௩)
சகடனுடன்வில்லவனுஞ் சனேந்திரன்மகாசூரன்
விகடன்பிரலம்பன் மேலுளதாசூரன் (௬௯௪)
மிஞ்சுகொடியோரா மிவர்கள்பதினெழுவர்
வஞ்சகத்தினலிவர்கள் வம்மிசத்தோடேயழிந்தார் (௬௯௫)
சூரனுடன்தாருகனுந் துர்ப்பானுகோபனுடன்
வீரமிகுசிங்கமுகன் மின்னுளசோமுகியும (௬௯௬)
தீயராமந்தத் திரிபுராளானவரும்
மாயமது[illegible]வர்கள் மாபாவிதுந்துபியும் (௬௯௭)

மாவிசுமாலியுடன் மகிடாசுரன்சம்பரன்
காலகேயர்நிவாத கவசருடன்தாடகையும் (௯௯௮)
இடும்பன்பகாசுர னிரணியாட்சசனென்போன்
கடுங்கோபச்சகராள் காலகதியாலழிந்தார் (௯௯௯)

## தாசியங்கம்.

புருவநெரியாமல்விழி புரளாமலேமெய்யில்
தெரியாமலேயங்கச் சேட்டைகளுஞ்செய்யாமல் (௧000)
அணுவளவுந்தலையை யசைக்காமலேமிடறு
தனில்பொருமாமல்சுருதி தந்திலயக்கியானம் (௧00௧)
நீதியாய்த்தொனிவீணை நேராயதிற்றந்தி
நாதமிட்டுப்பூசை ரண்டுஞ்சரிபாகம் (௧00௨)
அமுர்தரசதாளி யாய்மதுரசங்கீதம்
சமரசமாய்ப்பாடுமவள் தாசிமகள்தாசியென்பார் (௧00௩)
காயமேல்விழியுமுயர் கண்மேல்மனமும்வைத்துக்
காயவபிநயமுங் காட்டுமவளேபரதம் (௧00௪)
பாதாளச்சுருதியங்கம் பாங்காகவேசெய்து
மாதாளஞ்செய்பவனை மத்தளியனென்றிடலாம் (௧00௫)
பலராககீதங்கள் பாங்கானதாளங்கள்
நலமாகப்பாடுமவன் நல்லதொருபாடகனும் (௧00௬)
தாளத்திலேநிலைவு தரித்துநடனமிடும்
வாளுற்றசற்பாத்ர மறிபவனேநட்டுவனும் (௧00௭)
தாளலயமார்க்கந் தப்பாமலிங்கிதமாய்
வீணும்பதச்சேவை விழைவோன்பரிசனனும் (௧00௮)
வேசையர்தமில்லம்விட்டு வேறிடமுஞ்சென்றக்கால்
காசுபணமற்பமுமாய்க் கணிசங்குலைந்துவிடும் (௧00௯)

## வேசையர்கள் வரலாறு.

மிக்கவிலைமாதர் வீடுசெந்தைக்கடையாம்
பக்கல்பொதுவம்பலமாம் படுக்கைவீடென்பதுதான் (௧0௧0)
சந்தியிற்பாய்மெத்தையதாங் தண்ணீர்ப்பந்தலதரம்
பந்தமுறுதேகம் படித்துறையதென்றிடலாம் (௧0௧௧)
சூதாடுசோலைதுகில் துடைகள்தண்ணீர் [illegible]
மீதிலேகட்டிவைத்த மிக்ககத [illegible] (௧0௧௨)

மையாடுங்கண்ணியவள் வாரணிந்தகொங்கைரண்டும்
கையாடும்பந்து கடையெனுமிச்சம்பழமாம் (கOகடு)

பாகமுறுசெவ்வாய் படிகமதற்கொப்பாகும்
ஏகுமவள்மோகமது எட்டிக்கனியெனலாம் (கOகசு)

பாசமுடனிவ்வாறு பாங்குடையார்தீங்குபுரி
வேசையர்மேலாசைகொள்ளல் மேலவர்க்குமேன்மையல்ல ()

### பெண்களால்பங்கமடைந்தவர்.

சந்திரனுமிந்திரனுந் தன்னுடலிற்பங்கமுற்றார்
சந்ததஞ்சேர்வாலி சடாசூரன்கீசகனும் (கOகசு)

எண்ணரியவாழ்வுடைய விராவணனென்பவனும்
பெண்ணாலேபங்கமுற்றுப் பிராணலயமானார்கள் (கOகஎ)

சுந்தோபசுந்தரெனுஞ் சூரரிருவர்களும்
அந்தமிகுமோகினிமேலாசைகொண்டுமாண்டார்கள் (கOகஅ)

வையகத்திலொப்பில்லா மாபிலவானுமெழில்சேர்
தையலரைக்கண்டால் சவுரியமும்மில்லாது (கOகசு)

மானார்குணங்குறியிவ் வாறேதெரியாமல்
தானவர்மேல்மோகித்தால் தப்பாமல்துன்பம்வரும் (கOஉO)

### புருஷன்வாக்கியபரிபாலனஞ்செய்தவர்.

ஆதியருந்ததிமின் னாளுங்கவுசிகையுஞ்
சாதுகுணச்சாலி சந்திரவதியென்பவளும் (கOஉக)

உத்தமியில்மிக்காக வோதுநளாகினியும்
பத்தாவின்வாக்கியபரி பாலனமேசெய்தவராம் (கOஉஉ)

### மூன்றுயுகத்திலும்மமனோர்.

கிரேதாயுகத்திற் கெடுகோவிரேணுகையாம்
திரேதாயுகக்தினிலே சீதையெனும்பெண்ணாகும் (கOஉகூ)

துன்னுதுவாபரத்திற் துரோபதையேகூற்றவளாம்
இந்நாள்கலியுகத்தி லில்லமெல்லாங்கூற்றவப்பெண் (கOஉச)

### பெண்களுக்குச்சுவாதீனமில்லையெனல்.

பெற்றோர்கள்பேதையிலும் பின்பருவத்திற்புருஷன்
மற்றவருமூப்பினிலே மைந்தர்களேகாப்பவராம் (கOஉரு)

மூக்காலும்பெண்ணுக்கு முயற்சியொன்றுமில்லாதால்
மிக்கான்பெண்ஜென்மம் வீண்ஜென்மமாகுமென்றார் (கOஉசு)

புருடனேதெய்வமென்று போற்றுகின்றகற்புடையா
ளரிதானவாண்சென்மத் ததிகமென்றுசொல்லினரோ (கoஉஎ)
பத்தாவேதெய்வமென்று பணிந்தேத்துங்கற்புடையா
ளுற்றமழைபெய்யென் றுரைத்தாலுமாரிபெய்யும் (கoஉஅ)
மெத்தவழகுடனே மேன்மையுள்ளமின்னுளோர்
புத்திரனைப்பெற்றவன்றே போமழகுமேன்மைகளும் (கoஉகூ)

பெண்கள்வரலாறு.

மேலானகன்னியர்கள் விரகத்திலேயழுந்திக்
கோலமெல்லாஞ்சீரழிந்து குரங்காகாப்பேருமில்லை (கoஙo)
சதிராய்த்தன்னில்லம்விட்டுத் தனிவழிபோமின்னார்க்குப்
பதிவிரதாபாகமில்லை பங்கம்வந்துநேரிடுமாம் (கoஙக)
சரசகுணமில்லாத தையலைச்சேர்வதிலும்
விரைவாகச்சன்யாச வேஷமுற்றல்நன்றாகும் (கoஙஉ)
அன்பில்லாப்பெண்ணின்மே லாசைகொண்டுசேர்வதிலும்
முன்பாகச்சற்குணப்பெண் மூலைகண்டாற்போதாதோ (கoஙங)
பேரிளம்பெண்கள்பல பேரைப்புணர்வதிலும்
காரிகையாம்வாலையொரு கன்னிதனைச்சேர்தல்நன்று (கoஙச)
துற்கந்தம்வீசுமுடல் தோகையரைச்சேர்வதிலும்
நற்கந்தம்வீசுமுடல் நாரியர்கைக்குட்டுநன்றாம். (கoஙரு)
பெண்ணொருத்திபேசினாற் பேருலகமும்நடுங்கும்
பெண்ணிருவர்பேசினாற் பெருவானின்மீனுதிரும் (கoஙசு)
அலைவாரியுஞ்சுவறு மாயிழையார்மூவருக்குப்
பலபேர்தான்கூடிலென்ன பாடுபடுமோபூமி (கoஙஎ)
ஆசைகொண்டாள்போலே யபினயித்துமேல்விழுந்து
பேசுகின்றவஞ்சப் பிரியமறியாமல் (கoஙஅ)
அன்பில்லாவேசைநமக் கன்புள்ளாளென்றெண்ணி
நம்பினவரெல்லாரும் நாயினிலுங்கீழாவார் (கoஙகூ)

கர்மகாண்டம்.

பூதலத்தோர்க்காகப் பொருளைமுனிநாயனுமுன்
காதலுற்றுச்சொன்னகர்ம காண்டத்தியல்புசொல்வாம் (கoசo)
தர்மமில்லாதார்க்குச் சளமாமகாநோயும்
கர்மவியாதிவந்த காரணத்தைச்சொல்லுகிறேன் (கoசக)

தெய்வவுருவழித்தல், சிவசெந்தைவதைத்தல்,
வைதுதந்தைதாயை மனநோகவேபேசல், (கOசஉ)
நந்தவனமழித்தல், நாதாக்களைப்பழித்தல்,
நந்தவனத்தில்மல ராதவரும்புகொய்தல், (கOசங)
திட்டமுடனிப்பாவஞ் செய்தகொடியோர்க்குக்
குட்டநோய்வந்து கொடுமைசெய்யுமென்றனரே (கOசச)
நாகமுடனூர்வனங்கள் நல்லபறவைபட்சி
சாகவேகொன்ற சண்டாளரானவர்க்கு (கOசரு)
குதிரைவலிகாக்கைவலி குமரகண்டன்முசலி
சதிராகவேவந்து சாருமெனவுரைத்தார் (கOசசு)
உத்தமரைப்பழித்து, உதாசினங்கள்பேசுவதும்,
பத்தர்சித்தர்பாவம் பற்றித்துடர்ந்ததினால் (கOசஎ)
ஆதிசிவதலங்க ளானதனைப்பழித்துக்
கோதுபடச்சினந்து கொடுங்கோபஞ்செய்வதினால் (கOசஅ)
கற்புடையமின்னார்மேற் காதலதுகொண்டதினால்
தப்பிதமாய்ப்பித்தந் தலைக்கேறியேபிதற்றி (கOசகூ)
பண்பாய்லகிரி பதினெட்டுமெய்துமென்று
முன்பாகதட்சணா மூர்த்திமொழிந்தனரே (கOருO)
பச்சைமரங்கள்தனைப் பட்டைவெட்டியேயுரித்தும்
மிச்சந்தளிர்கொழுந்து வேர்முதலாய்வெட்டுவதும் (கOருக)
குளிர்ந்தமரத்திலைகாய் கொம்புதனைமுறித்தல்
அழுந்தமலராப்பூவை யனவரதங்கிள்ளினதால் (கOருஉ)
மண்டைக்கரப்பன் வாயுவொருத்தலைநோய்
மண்டையிலேகுத்து மகத்தானபீனசங்கள் (கOருங)
மாறுய்க்கபாலத்தின் வாய்வானநோய்தானும்
வீறுய்வந்தெய்துமென்று விளம்பினார்மாமுனியும் (கOருச)
வித்தானதையழித்து மேலுமதைத்தின்றதனால்
பத்தியுடன்கன்றுக்குப் பால்விடாத்தோஷமதால் (கOருரு)
பாலகரையழித்துப் பச்சைமரப்பிஞ்சுகளைச்
சாலவிளம்பயிர்கள் தன்னையழித்ததினால் (கOருசு)
மானார்க்குக்கெர்ப்பநோய் வருமவர்க்குமைந்தரில்லை
ஆனாலும்பாவிகள்தா னந்தரங்கஞ்சொல்லவொண்ணா (கOருஎ)

சூரியனைத்தோத்தரியாத் தோஷமதனாலும்
நீரினுயிரைப்பிடித்து நெருப்பிலிட்டுச்சுட்டதினால் (௧0௫அ)
மடிப்பாய்ப்பிராணிகளை மாயவேசெய்வதினால்
துடிக்கவுயிரோடதனைச் சுடுமெணலிற்போடுவதால் (௧0௫௯)
நல்லநிழல்மரத்தை நாருரித்துக்கொண்டதினால்
வல்லமையாய்ப்பச்சை மரங்கள்தனைவெட்டினதால் (௧0௬0)
பசித்தோருரிக்கவதைப் பாராமலுண்டதினால்
நிசமாய்ச்சுரதோஷம் நேருமென்றேயுரைத்தார் (௧0௬௧)
மாதாபிதாவை மனநோகச்செய்ததினால்
வேதாந்தசற்குருவை மெய்நோகவைததினால் (௧0௬௨)
வீம்பானபேச்சுகளும் விசுவாசபாதகமும்
நாம்பெரியோரென்றுபல ரானவரையும்பழித்தல் (௧0௬௩)
தெய்வநிலையழித்தோர் தினந்தினமும்பொய்யுரைத்தோர்
வையகத்திற்பாண்டுநோய் வந்தேமெலிந்திடுவார் (௧0௬௪)
ஊனனைதைத்தின்ன உயிர்வதைகள்செய்ததினால்
மானார்கற்பழித்துப்பூ மரங்கள்தனைவெட்டினதால் (௧0௬௫)
புண்ணியந்தான்செய்யாமல் புண்ணியங்களைக்கெடுத்துந்
தண்ணீர்குளமேரி தன்னையுடைத்துவிட்டும் (௧0௬௬)
நிறுப்பதளப்பதுவும் நிரைகள்குறையவிற்றும்
மறுப்படாநீரில் மலமூத்திரங்கள்விட்டும் (௧0௬௭)
துராகதமாயிவ்வாறு துன்பங்கள்செய்தவர்கள்
கிராணிக்கழிச்சல்வந்து கெடுவாரெனவுரைத்தா (௧0௬அ)
பொல்லாக்கடுங்கோபர் பொய்யேமிகுந்தவர்க்குஞ்
சொல்லுவதைப்பின்மறுத்துத் தூஷணித்துப்பேசுபவர் ()
உண்டுமிகப்பேச்சுகளால் ஊராரைவைதவர்க்கும்
திண்டுமிண்டாய்ச்சிவ செந்தைநஞ்சாற்கொன்றவர்க்கும் ()
கன்னத்திற்புத்து கன்னேசிவிப்புருதி
கன்னத்திற்சூலை கடிதானபல்லரணை (௧0௭௧)
தந்தரோகங்கள் சகிக்கரியரவாய்ப்புத்து
தந்தரோகஞ்சூலை தப்பாமல்வந்திடுமாம் (௧0௭௨)
சற்குருவைத்தூஷணித்தோர் தன்மையில்லாக்கோபத்தால்
முக்கியஞ்சேர்பாதையிலே முள்ளதனைப்போட்டவர்க்கும் ()

பச்சைமரமதனைப் பங்கமுறவெட்டினர்க்கும்
உச்சிதமாய்ப்பூவிலைகா யுதிரவடித்தவர்க்கும் (க0எச)
வண்டுகெடிகரப்பன் மகத்தானகுட்டநோய்
என்றுமிவர்கட்குவங் தெய்துமென்றார்மாமுனியும் (க0எரு)
பத்தர்சிவசித்தர் பரமசிவயோகிகளைச்
சித்தங்கலங்கவே செய்தகொடும்பாவிகட்கும் (க0எசா)
வில்லாலுமம்பாலும் வெடிமருந்துக்குண்டாலும்
கல்லாலும்பொல்லாக் கபடத்தாற்சீவசெந்தைக் (க0எஎ)
கொன்றகொடும்பாவிகட்குங் கொடிதானமார்பாணி
கண்டமாலைபிளவை கழல்வாதம்வந்திடுமாம் (க0எஅ)
காண்கவிசையாப்பெண்ணைக் கவனித்துப்பார்த்தவர்க்கும்
ஏங்கியவர்போகத்தி லின்பமுற்றபாவிகட்கும் (க0எகூ)
மின்னாளைக்கண்டு விலகாமற்போனவர்க்கும்
பின்னவளைத்தூஷணமாய்ப் பேசிப்பழித்தவர்க்கும் (க0அ0)
தப்பிதமதாகப்பொய்ச் சத்தியங்கள்செய்தவர்க்கும்
மெய்ப்பானதெய்வத்தை மேவிநிந்தைசெய்தவர்க்கும் (க0அக)
பலதரமுமுயிர்வதைகள் பண்ணுவதைக்கண்டிருந்தும்
விலகாமற்பார்த்திருந்த வேட்டைநாயானவர்க்கும் (க0அஉ)
கண்ணில்வியாதிவருங் கண்ணொளிவுதான்மறையும்
தொண்ணூற்றியாறுநோய் தொடருமென்றார்மாமுனியும் ()
பேறானதேதுமுயிர்ப் பிராணிகளைத்தான்பிடித்து
கூறாகத்தூக்கிவைத்துக் கொண்டகொடும்பாவிகட்கும் (க0அச)
கோவதனைக்கொன்றவர்க்குங் கொடிதானகண்ணிவைத்துச்
சீவசெந்தைநீர்த்துறையிற் சேதமேசெய்தவர்க்கும் (க0அரு)
அலறும்பிராணிகளை யமுக்கியதனுடைய
தலையறுத்துமிக்ககுடல் தன்னையெடுத்தவர்க்கும் (க0அசா)
ஈனமிரக்கமற்ற விராட்சதனையொத்தவர்க்கும்
ஆனந்தவாய்வுவந் தழிக்குமெனவுரைத்தார் (க0அஎ)
திருந்தவேமுற்பிறப்பிற் சேயிழைமார்தங்களுக்கு
மருந்தீடுசெய்து மயக்கிக்கற்பழித்தவர்மேல் (க0அஅ)
மயலானபெண்போலே மறுசென்மத்தினிலவரும்
சயரோகமாகவந்து சாவாரெனவுரைத்தார் (க0அகூ)

மார்க்கமதில்நிற்கு மரங்கள்தனைவெட்டினவர்
பூக்கமழுநல்மரத்தின் புறத்தொலியைத்தானுரித்தோர் (௧௦௯௦)
வீணிலேபூடுகளை விருட்சங்களைமுறித்தோர்
ஊனுகின்றகால்முறித்தே யோடாமற்செய்தவர்கள் (௧௦௯௧)
தம்பமாய்ச்சீவசெந்தின் தந்தங்களையுடைத்தும்
கொம்புகளைமுறித்துங் கொடும்பாவஞ்செய்தவர்க்கு (௧௦௯௨)
வாதங்கள்வந்து வழுங்காமற்கால்கைகள்
கூதலுடனிருங் குளிரும்வருமென்றனரே (௧௦௯௩)
பலபேர்வயிறெரியப் பண்ணிவைத்தபாவிகட்கும்
நலஞ்சேர்பெரியோரை நடுநடுங்கப்பேசினர்க்கும் (௧௦௯௪)
மாறுமனக்கசடு வைத்துவெகுபேரைச்
சீரழிவுசெய்தவர்க்குஞ் சிலர்பசிக்கவுண்டவர்க்கும் (௧௦௯௫)
சண்டாளதத்துவங்கள் சதாகாலஞ்செய்தவர்க்கும்
மிண்டானகுன்ம வியாதிவந்துசூழுமென்றார் (௧௦௯௬)
பட்சிமிருகங்கள் பாம்புமுதலானதனை
மெச்சிப்பிடித்தடைத்தால் விலங்கவர்க்கேயெய்துமென்றார் ()
சாலப்பலவுயிரைத் தண்ணீரினண்டுகளைக்
காலைமுறித்தவர்க்குக் கால்கைமுடங்குமென்றார் (௧௦௯௮)

ஒப்பனையானவை.

வெடுக்கென்றசொல்லாளை, மேலோரகத்தில்வைத்தல்,
மடத்தையுங்கட்டியதில் வன்குரங்கைவைத்ததொப்பாம், ()
எண்ணுமல்வஞ்சகப்பெண் ணின்சொல்லைநிச்சயித்தல்,
மண்குதிரைதன்னைநம்பி, மலையாற்றிற்சென்றதொக்கும். (௧௧௦௦)
அகாமியமுள்ளாரெனினு மறிவாளரைச்சேர்ந்தால்
மகாமேருவைச்சேர்ந்த மானதனையேநிகர்ப்பர் (௧௧௦௧)
தன்னவரேயானுஞ் சார்பறிந்துசேர்தல்நன்று
துன்னுசுடர்விளக்கெனினுந் தூண்டுகோல்வேணுமதாம். ()
கடவுள்விதியைவெல்லக் கடவரெவராருமில்லை,
மடலிலேயிட்டாக்கால் குடலிலேதங்காதே. (௧௧௦௩)
நிலையாம்நிமலனடி நேர்ந்தாற்குறையுளதோ,
மலைமேலிருப்பவனை, வந்துபன்றிபாய்ந்திடுமோ (௧௧௦௪)
பெரியோர்திருவுளந்தான் பேதித்தாலார்தீர்ப்பார்
கரியமலைசாய்ந்தால்மண் கட்டியதுதாங்கிடுமோ (௧௧௦௫)

கடந்தெவருஞ்செல்லாத காலம்வெல்லப்போகாது
உடைந்தசங்கில்சற்றுமொரு வோசைபரியாதே (௧௧0௬)
மட்டிகட்குநல்லபுத்தி வர்ணித்துச்சொன்னாலும்,
இட்டமுற்றதன்குணம்போ யெய்தாதுநற்குணந்தான் (௧௧0௭)
கடையரால்மேலோர்க்குக் கருமங்களும்விழலாம்
முடப்புல்லுந்தண்ணீரில் முக்கலத்தையேயழிக்கும் (௧௧0௮)
வலியோரைச்சார்ந்தவர்கள் மற்றெவர்க்குமஞ்சுவரோ
மலையேதான்லெக்கானல் குருடனெய்யமாட்டானே (௧௧0௯)
தலையானோரைச்சேர்ந்தால் தாழ்வில்லைத்தாழ்வுவந்தால்
புலிக்கடிமைப்பட்டுங் கறிக்காசைப்பட்டதொக்கும் (௧௧௧0)
மெலிவாகிலுமேலோர் மேற்செயலேசெய்வார்கள்
புலிபசித்தாலெப்போதும் புல்லருந்தமாட்டாதே (௧௧௧௧)
விற்பனமாமேலோர்கள் மெலிவாகிப்போகிலென்ன
குப்பையிலேபோட்டாலுங் குன்றிமணிமங்காதே (௧௧௧௨)
நேசருடன்பிறந்தோ ரிரண்டுபேர்வேறுபட்டால்
ஊசியிலேகப்பாகி நூல்நுழையாவாறாகும் (௧௧௧௩)
ஏர்க்காதவைசெய்தா லிகழ்ச்சியென்றும்போகாது
ஊர்வாயைமூட வுலைமூடிதானுமுண்டோ (௧௧௧௪)
எட்டாக்கனியதனுக் கேராசைப்பட்டுமென்ன
தொட்டுக்கட்டாதவித்தை சொட்டுப்போட்டால்வருமோ ( )
நாட்டுச்சுரைக்காய்கறிக்கு நாட்டினாலெய்தும்து
ஏட்டுச்சுரைக்காய்கறிக் கெய்தாதொருநாளும் (௧௧௧௬)
மாறுபாட்டுக்காரன் வாக்குநிசமென்றிருத்தல்,
ஏறவிட்டேயேணிதனை யெடுத்துவிட்டவாறாகும் (௧௧௧௭)
வாழ்வுடையோர்முன்னே வறுமையுற்றோர்சொல்நிலையா,
ஏழைசொல்லம்பலமு மேறாதுகண்டீரே (௧௧௧௮)
கொடையாளியேவறுமைக் குள்ளாகினுமீவன்
கடுகுசிறுத்தாலுங் காரமதுபோகாதே (௧௧௧௯)
விற்பனக்குருமூடன் மேலாம்பரமானால்
குப்பையுயுர்ந்து கோபுரமுந்தாழ்ந்ததொக்கும் (௧௧௨0)
இட்டமுறவாழ்ந்தோர்க் கியல்புதப்புங்காலங்
கெட்டவர்க்குற்றார் கிளைதனிலுமில்லையில்லை (௧௧௨௧)

இணக்கமுடனல்லபுத்தி யெவளவுங்கேளார்க்குரைத்தல்
பணத்துக்கோரம்புகொண்டு பாழிலெய்தவாறுகும் (ககஉஉ)
காலிபயிர்தின்னுமற் காப்பதுவேவேலியுமாம்
வேலிபயிர்தின்றால் விளைவதொருபோதுமில்லை (ககஉக)
நிலையானகாரியமு நில்லாதுமந்திரத்தால்
கலைப்பார்கலைத்தாக்கால் முலைப்பால்மருந்தலவோ (ககஉச)

### கூடாவொழுக்கமகளிர்.

பார்ப்பளவிலேதிரும்பிப் பாராளுரைத்தமொழி
கேள்ப்பாள் மருவசன மேதுங்கிளத்தாளாம் (ககஉரு)
கள்ளன்போல்மற்கட்டிக் கவிழ்ந்தாலுமல்புரிவாள்
உள்ளான்புக்காரருடன்போயுஞ்சண்டைசெய்வாள் (ககஉசு)
ஆடையுடனுபரண மடைக்காய்முதல்கொடுத்தால்
நாடாள்புறங்கையி னுலதனைத்தட்டுவளாம் (ககஉஎ)
அங்கையாற்றொட்டா லாடரவம்போற்சீறி
சங்கைகெடப்பேசிச் சத்துருவைப்போல்பார்ப்பாள் (ககஉஅ)
அயலாருடனேவிளை யாடியேகூடுவளாம்
மயலாய்க்கணவன்பிடித்து மருவச்சரசஞ்செய்தால் (ககஉகூ)
மெய்யதிலேநோய்கள் மிகவெனவுந்தர்க்கமிட்டுப்
பொய்யாணையிட்டுப் புறங்காட்டியேபடுப்பாள் (ககங0)
முந்தியுறங்கிப்பெரு மூச்சுவிட்டெத்தனையோ
சந்தோஷஞ்சொன்னாலுஞ் சற்றேனுமெயிரங்காள் (ககஙக)
ஆறிடத்திற்போடாவென் றவன்கொடுப்பதையெறிந்து
சீறிச்சினந்து தெய்வமேயென்றழுவாள் (ககஙஉ)
நாடானதிற்பெண்கள் நான்குவகைச்சாதியிலும்
கூடாவொழுக்கக் குறைபிதுவாமென்றனரோ (ககஙங)

### அன்புற்றமகளிர்.

ஆடவர்களெந்நாளு மாசைகொண்டபெண்குறிப்புங்
கூடாவொழுக்கக் குறிப்பதனைச்சொல்லுகிறோம் (ககஙச)
பலநாளுமாடவனைப் பார்த்தகண்ணுயிருப்பாள்
தலைவனவளைப்பார்க்கில் தலைகவிழ்ந்துமேசிரிப்பாள் (ககஙரு)
உள்ளன்புகாட்டா ளோங்கிப்பெருமூச்சுவிடாள்
தள்ளாக்குழந்தை தனைத்தழுவிமுத்தமிடாள் (ககஙசு)

பாங்ியைாத்தழுவாள் பாங்கனைப்பார்த்துநகைத்துப்
பாங்காய்த்தலையசைத்துப் பல்லைக்கடித்துறுக்கி (கககூஎ)
பிறரெவரையும்நிறுத்திப் பேசுவதுபோல்பேசிப்
பிறதால்போய்மூக்கைப்பிசைந்துமே தும்மல்தும்மி (கககூஅ)
தலைவனன்புவைத்தாலுந் தன்னுடன்பொய்யன்பென்று
தலைவன்மொழிகேட்டுமவன் தன்தொழிலையும்மகிழ்ந்து (கககூகூ)
ஆடவன்வீட்டுக் கடிக்கடிதான்போதல்வால்
ஆடவனைக்கண்டா லறக்கணிசிநாணுதலும் (ககசுO)
கொம்பனையார்க்குள்ளன்பு குறிப்பறிதலாகுமென்று
முன்பாகநூலுகளில் முன்னோருரைத்தனரே (ககசுக)

பெண்களுடைய தத்துவம் பத்துக்கும் விபரம்.

மிக்கவின்றாலில் மேன்மைகுறிப்பாய
தக்கதொருபெண்கள்பத்துத் தத்துவத்தைச்சொல்லுவோம். ()
பொன்னிறமும்மல்லிகையின் பூமணமுந்தாமரையின்
வன்னமலர்முகமு மாசற்றமூர்தமொழி (ககசுங)
தனதானியவாழ்வுஞ் சார்ந்தசனசேகரமும்
இனமோடும்வாழ்வா ளிவள்தெய்வதத்துவமாம் (ககசுச)
இரக்கம்வணக்க மின்பமுமுறுதேகம்
சிறக்கவேதானதர்மந் தெய்வவிசுவாசம் (ககசுரு)
வன்கொலைகண்டஞ்சுமவள் மானிடர்கள்தத்துவமாம்
முன்சொல்லும்நூலதனில் முறையிலுரைத்தனரே (ககசுசு)
நித்திரையேயிருத்தல் நெடுமூச்சுசோம்பல்களும்
மெத்தவேகொட்டாவி வீடெல்லாம்போய்த்திரிதல் (ககசுஎ)
சுத்தமில்லாத்தேகஞ் சுசியில்லாப்போஜனமும்
நத்துமின்றமின்னாள் நரகதத்துவமாகும். (ககசுஅ)
ஆற்றில்குளத்தி லலைகடலிலேமலையி
லேற்றமிகுபெண்களுட னென்றும்விளையாடமனம் (ககசுகூ)
நாணமில்லாமையெர் நாளுங்கொடுங்கோபம்
வாணுதலாளேயியக்க மாதென்றுசொல்லுவதாம் (ககருO)
பரியளசுகந்தாதி பகிரத்தினவாபரணம்
சரசசங்கீதவித்தை தன்னில்வெகுவிருப்பம் (ககருக)
சார்ந்ததினமுந் தர்மசிந்தைநகற்புடையாள்
காந்தருவதத்துவத்தின் கன்னியென்றுசொல்லிடலாம் (ககருஉ)

வெட்கமில்லாமை யிருந்தபலபோசனமுந்
துற்கந்தவாசந் தடியானவார்த்தைகளும் (௧௧௫௩)
உட்டினசரீர முடையழுக்குமாமிசமு
முடைமதுவுண்ணல் முறமையில்லாத்துர்நடத்தை (௧௧௫௪)
நித்திரையில்லாமையிவை நேர்ந்தபெண்ணுமேபேயின்
தத்துவமாமென்று சாற்றினார்முன்னோர்கள் (௧௧௫௫)
அக்கினிக்கண்ணு மழகுசற்றுமில்லாமை
வக்கணையாயாடவனை வலியப்பிடித்திழுத்தல் (௧௧௫௬)
மாறுபாடானமன மலனுக்கட்டிப்புணரும்
நாரியவள்தானே ராட்சதரின்தத்துவமாம் (௧௧௫௭)
ஆரிடத்திலாணு மன்புசற்றுமில்லாமை
மாறிமாறிப்பார்த்தல் மயிர்நூவுந்தூறுதலை (௧௧௫௮)
வேகமுறும்பசியு மிருந்தபயமுடையாள்
காகத்தின்தத்துவத்தின் கன்னியவளாகுமென்றார் (௧௧௫௯)
கூடுகின்றவாடவனைக் கூர்நகத்தாற்பல்லதனால்
நாடிக்கடிப்பதுவு நாணஞ்சற்றில்லாமை (௧௧௬0)
நிறமதுவும்பங்கமதாய் நேத்திரத்தால்மருட்டல்
குரங்கினுடதத்துவத்தின் கொம்பனையாளாகுமென்றார் (௧௧௬௧)
திண்டுமிண்டானசொல் தேகசுத்தமில்லாமை
வண்டிவெடித்தகுரல் மல்லுக்கட்டிப்புணர்தல் (௧௧௬௨)
மழுமாரிகண்டவனை வலியப்பிடித்திழுப்பாள்
கழுதையின்தத்துவத்தின் கன்னியவளாகுமென்றார் (௧௧௬௩)
வையகத்திலேமேலாமணவாளன்சொன்னபடி
மொய்குழலார்சாதி மூன்றின்குறியுரைப்போம் (௧௧௬௪)
மானைநிகர்த்தவிழி, வனசமலர்முகமுந்,
தேனைநிகர்த்தமொழி, தேமற்படர்ந்தவுடல்,  (௧௧௬௫)
சுருண்டுநெளிந்தகுழல், தும்பிப்பிடிநடையும்,
திரண்ட"கொவ்வைக்கனிவாய்,"செண்பகப்பூத்தேகமுமாம், ( )
மின்னிடையுந்தென்ன மிளம்பாளைவாசமுமாய்
அன்னநடையு, மழகில்ரதியெனவும், (௧௧௬௭)
வட்டமாய்த்தங்கநிற மானவிளமார்பும்,
இட்டமுறுகலவிக் கிசைந்திட்டசற்குணமும், (௧௧௬௮)
தர்க்கமிடுமன்கோபி சாப்பாடுமேற்பமதுழு,
இக்குறியின்மாதவளு மின்பமுளமடஞ்சாதி (௧௧௬௯)

பேட்டைக்குதிரைச்சாதி.

உயர்ந்துகுளிர்ந்தவுச்சி யுட்குழிந்தகன்றகண்கள்
உயர்ந்துபருத்தகொங்கை யுதடுபருத்திருக்கும் (ககஎ0)
சாலப்பருத்தமயிர் தந்தமோநீண்டிருக்கும்
தாலவிடைபருத்துத் தாழிபோலேவயிறும் (ககஎக)
அடக்கமொன்றுமில்லாமை யல்குல்பணைத்திருக்கும
மடக்கொடியாள்பேசுகின்ற வாய்மைகுளறுதலாம் (ககஎ௨)
போசனத்திலேபிரியம் புணர்ந்தவர்மேலும்பிரியம்
வீசும்புலால்நாற்ற மிரவுபகல்நித்திரையும் (ககஎ௩)
தீராவெறுப்புஞ் சிவந்தபருவுடனுங்
கூறுனமாதுபெட்டைக் குதிரையென்றுசொல்லினரோ (ககஎ௪)

பிடியானைச்சாதி.

சாலபபருததமெற்றி, தாடைசெவிநாசி
காலுடனேகைதோளுங் கழுத்துமிகப்பருத்து, (ககஎ௫)
சுருண்டுசிவந்தமயிர், தொங்குமதரமுமா
முரண்டிதஞ்சண்டை, மொழியுமிடிபோலாய், (ககஎ௬)
அல்லும்பகல்கலவி யானதிலேசிந்தையுமாய்ப்
பல்லுமிடையுளதாய்ப் பாவத்துக்கஞ்சாமை (ககஎஎ)
யார்க்குமனுகூலி, யானைமதநாறி
பார்க்கும்பணிரண்டு அங்குலமாமல்குலது, (ககஎஅ)
விடியளவுஞ்சண்டைவிடாள், வெட்கத்துக்கஞ்சாளாம்,
பிடியானைச்சாதியென்று பேசினார்முன்னூலோர், (ககஅக)
இன்னம்சிலநீதி யெடுத்துமேகூறவென்றால்,
வன்னமாயிந்நூல் வளருமெனமுடித்தேன். (ககஅ0)

வாழி.

ஐங்கரனும்வாழி, ஆறுமுகன்வாழி,
மங்கைபாகன்வாழி, மாயன்பிரமன்வாழி, (ககஅக)
தூயமுனிவோர்வாழி, சுத்தசைவர்வாழி,
நேயசெங்கோல்செலுத்தும் நிருபர்புகழ்வாழி, (ககஅ௨)
கற்புடையமாதர் கவிவாணர்தாம்வாழி,
விற்பனமாயிதைப்படிக்கும் வித்தகரும்வாழியவே. (ககஅ௩)

மனுநீதிகாதல்
முற்றிற்று.